திருவண்ணாமலை

# ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர்






வெளியீடு :

ஈசான்ய மடாலயம்

உ

சிவமயம்

திருவண்ணாமலை

# ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர்

## வரலாற்றுக் குறிப்புகள்

ஆசிரியர். பி.ஸ்ரீ.




1981

அடியேனை ஆள

அருள் மேனி தாங்கிப்

படிமீது எழுந்தருளிய

பரம தயாநிதியான

ஸ்ரீ சற்குரு நாதன்

திருவடிகளில்

சமர்ப்பணம்

— இராம்

மறைமுடி வதனில் விளங்கிடும் ஒளியே
மான்மழு வரதமோ (டு) அபயம்
கறைமிட றெடுமுக் கண்ணும்நாற் புயமும்
கரந்துமா னிடஉருக் கொண்டே
உறைதரும் உண்மை உணர்வினை உணர்த்தி
உயர்புலி ஏவல்கேட் டிருப்பச்
சிறைதவிர் அருளை வாழும்ஈ சான
தேசிகன் திருவடி பணிவாம்.



வரிப் புலிகள் காவல் செய்ய வீற்றிருந்த

உ

சிவமயம்

# திருவண்ணாமலை

# ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர்

## வரலாற்றுக் குறிப்புகள்

---

உண்ணாமுலை உமையாளொடும்
உடனாகிய ஒருவன்
பெண்ணாகிய பெருமான் மலை
திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள்
மழலைம்முழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை
வழுவாவணம் அறுமே.

---

திருவண்ணுமலை

# ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர்

## வரலாற்றுக் குறிப்புகள்

### 1. தோற்றுவாய்

கல்வி கேள்விகளில் சிறந்த சான்ருேர்களும் சிவானுபவச் செல்வர்களும் வாழ்ந்து நல்வழிகாட்டிப் புனிதமாக்கியுள்ள நம் தமிழ் நாட்டிலே அருணுசலம், அருணகிரி, சோணுசலம், அருணுபுரி, திருவருணை முதலான பல திருப் பெயர்களுடன் விளங்கும் திருவண்ணுமலை என்ற திவ்யக்ஷேத்திரம் உலகப் பிரசித்தி பெற்றதாகும். இதற்கு **ஞானநகரம்** என்னும் ஒரு விசேஷமான பெயரும் உண்டு.

கடல் மட்டத்திற்கு மேல் 2,668 அடி உயரமுள்ள மலையும், அதனை அடுத்து அம்மலைக் குழந்தைகளோ என நிமிரும் கோபுரங்களும், கோட்டை மதில்களோ எனத் தோன்றும் கோயில் திருமதில்களும், திருவண்ணுமலையை ஒரு ஞானப் பெருங்கோட்டையாக எடுத்துக் காட்டுகின்றன.

'ஞான தபோதனர்களை வாவென்று அழைக்கும் மலை அண்ணுமலை' என்று தமது 'அண்ணுமலை வெண்பா'வில் இவ்வூரின் ஞான-தபோதனர்களில் ஒருவராகிய குரு-நமசிவாயர் குறிப்பிடுகின்ருர்.

இந்த ஸ்தலத்தின் அருமை பெருமைகளை அருணசல புராணம், அருணகிரி புராணம், சிவமகா புராணம், சிவரகசியம் முதலிய பல புராண நூல்கள் விரிவாய்க் கூறுகின்றன.

தேவார திருவாசகங்களிலும் திருவண்ணமலையின் பழம்பெரும் புகழ் ஒளி வீசக் காண்கிறோம். பெரிய புராணத்திலும் திருவண்ணமலையின் புகழ் மலைவிளக்காகத் திகழ்கின்றது. திருப்புகழும் திருவண்ணமலையின் திருப்புகழை ஓதுகின்றது. ஏன், திருப்புகழ் ஆசிரியரான அருணகிரிநாதரே திருவண்ணமலையில் தோன்றிய ஞானப் பெருஞ்சுடர்களில் ஒருவரல்லவா? இம்மலையைக் கந்த புராணம் 'தன்னிகர் இன்றி நின்ற தழற்பெருஞ் சைலம்' எனப் போற்றுகிறது.

இத் தழற்பெருஞ் சைலத்தைத் திருஞானசம்பந்த சுவாமிகள் கண்டதும்

**உண்ணமுலை உமையாளொடும்**
**உடனுகிய ஒருவன்**
**பெண்ணுகிய பெருமான்மலை**

என்று பதிகம்பாடத் தொடங்கிவிட்டார். பிறகு அண்ணமலையை அடைந்து 'மலைமீது தங்கும் விருப்பில் வீற்றிருந்தார்' என்கிறது பெரிய புராணம்.

**மண்ணார்ந்தன அருவித்திரள்**
**மழலைம்முழ வதிரும்**
**அண்ணமலை**

என்று தேவாரத்தில் திருஞானசம்பந்தர் இம் மலையை எவ்வளவு வசீகரமாய்க் குறிப்பிடுகிறார் பாருங்கள்! உண்ணுமுலையம்மையின் கருணைபோல் மழை பொழிந்து நாடு செழித்து வளங்கொழித்த காலத்தில் திருஞானசம்பந்தர் திருவண்ணாமலையை அடைந்தாரென்று ஊகிக்கலாம். காடும் நாடுமாயிருந்த இப் பிரதேசத்திலே இம்மலையில் எண்ணிறந்த அருவிகள் பொங்கிப் பெருகி வந்ததைச் சம்பந்தர் கண்ணுற்றிருக்கவேண்டும். 'கங்காதரர் ஒரு கங்கையல்ல, பல கங்கைகளைத் தரித்திருக்கிறாரோ!' என்று வியக்குமாறு காட்சியளித்த மலையை, லிங்கமாகவே தரிசித்து 'மலைமீது தங்கு விருப்பில் வீற்றிருந்தார்' எனக் கருதலாம்.

திருஞானசம்பந்த சுவாமிகள் சில நாள் தங்கிப் புனிதமாக்கிய திருவண்ணாமலையைத் திருநாவுக்கரசு சுவாமிகளும் தொழுது வலங்கொண்டு பதிகத் தமிழ் பாடிப் பணி செய்தார்.

**துங்க வரையின் மிசைஏறித்**
**தொண்டர் தொழும்புக்(கு) எதிர்நிற்கும்**
**அங்கண் அரசைத் தொழுதெழுந்து**
**திளைத்துத் திருநா வுக்கரசர்**

என்று சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தில் கூறுவதிலிருந்து, அக்காலத்திலே மலையின் உச்சியில் சிவலிங்கம் இருந்ததென்று ஊகிக்கலாம். அந்த லிங்க மூர்த்தியைத்தான் திருநாவுக்கரசரும் திருஞானசம்

பந்தரும் தரிசித்துத் தோத்திரம் செய்திருக்க வேண்டும். இந்த லிங்கமூர்த்தியைப் பிற்காலத்தில் அடி அண்ணுமலை திருக்கோயிலில் பிரதிஷ்டை செய்தார்கள் என்று ஊகிப்பது தவருகாது.

தேவாரம் பாடிய மூவரும் வாழ்ந்த காலம் பல்லவ மன்னர்கள் பெருவாழ்வு வாழ்ந்த காலம். அக்காலத்துக் கல்வெட்டு ஒன்றும் இக்கோயிலில் காணப்படவில்லை. இக்கோயிலின் கருங்கல் - திருப்பணி பழைய சோழமன்னர் காலத்தில் ஓரளவு முற்றுப் பெற்றிருக்க வேண்டும். மலைமீது செங்கற்சுதை மாடமாக இருந்த அண்ணுமலையார் திருக்கோயிலைத்தான் திருஞான சம்பந்த சுவாமிகளும் திருநாவுக்கரசரும் தரிசித்திருக்க வேண்டும் என்று கருதலாம்.

'ஆனைக்காவில் அரனே ! பரனே ! அண்ணுமலையானே!' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடியிருப்பதால் அவரும் திருவண்ணுமலைக்கு வந்து மலைமேல் அண்ணுமலையாரைத் தரிசித்திருக்கக் கூடும். அவருடைய பதிகங்கள் கிடைக்கவில்லை என்றும் கருதலாம்.

மாணிக்கவாசக சுவாமிகள் திருவண்ணுமலைக்கு வந்து இங்கே தங்கித் திருவாசகத்தின் பகுதிகளான 'திருவெம்பாவை' 'திருவம்மானை' என்னும் பாடல்களைப் பாடியுள்ளார். இவர் மார்கழி மாதத்தில் இங்கே தங்கினர் என்று ஊகிக்கலாம். திருவாதிரைக்கு முந்திய பத்துநாள் பெண்கள் விடியற்காலையில் எழுந்திருந்து வீட்டை மெழுகிக் கோலமிட்டுக் குளத்திற்கு நீராடச்

செல்வதை மணிவாசகப் பெருமான் பார்த்தார். அப் பெண்கள் ஒருவரையொருவர் துயில் எழுப்பிக் கூட்டமாக 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி'யாகிய அண்ணுமலையாரின் புகழைப் பேசிக் கொண்டும் பாடிக் கொண்டும் சென்றதைக் கண்டு மகிழ்ந்தார்; 'திருவெம்பாவை' பாடினர்.




ஒரு நாள் கன்னிப் பெண்கள் சிலர் தெரு முற்றத்தில் அம்மானை ஆடுவதைக் கண்டார். அண்ணுமலையார் புகழை அப்பெண்கள் கூற்ருக அமைத்துத் 'திருவம்மானை' பாடினர்.

மணிவாசகப் பெருமான் வந்து தங்கிய அந்தக் காலத்திலே திருவண்ணுமலை நிலவளமும் நீர்வளமும் நிறைந்து, காடும் சோலையும் மாடகூடங்களும் பச்சை போர்த்த மலையும் கோவிலும் குளங்களுமாய்க் காட்சி யளித்தது. தேவாரம் பாடிய மூவரும் கண்ட வளங்களையும் வனப்புக்களையும் மணிவாசகப் பெருமானும் கண்ணுற்ருரெனக் கருதலாம்.

நல்ல மழை பெய்து நாடு செழித்து நீர்நிலைகள் நிறைந்து பொலியும் திருவண்ணுமலையைத் திருவெம்பாவையில் பிரதிபலிக்கக் காண்கிருேம். அத்தகைய குளம் ஒன்றிலே குளிர் மிகுதிக்கு அஞ்சிப் பெண்கள் மெல்ல மெல்ல இறங்காமல் பளிச்சென்று குதித்து நீந்தி நீராடுவதையும் மணிவாசகப் பெருமான்,

மொய்யார் தடம்பொய்கை
புக்கு முகேரென்னக்
கையால் குடைந்து
குடைந்துன் கழல்பாடி

எனக் கண்டு காட்டுவதுபோல், திருவெம்பாவையில் பாடியுள்ளார். வளைகள் கலகலென, மேகலைகள் சல சலெனப் 'பூத்திகழும் பொய்கை' பொங்கப் பாய்ந்து பாய்ந்து பெண்கள் நீராடியதையும் வருணித்திருக்கிறார்.

தண்ணீர் பொங்கி அலைமோதும் பொய்கையை மணிவாசகப் பெருமான் வாய் குளிர வருணிப்பது, அன்று திருவண்ணமலையில் பக்தியும் ஞானமும் பொங்கிப் பாய்ந்து வெள்ளமிட்டதற்கும், அந்த ஞானனந்த வெள்ளத்திலே நீராடி நிர்மலராய்ச் சான் ரோர்கள் திகழ்ந்ததற்கும் ஓர் அறிகுறியாகும்.

மணிவாசகர் காலத்திற்குப் பின்பும் திருவண்ண மலையின் ஞான வெள்ளம் எத்தனை அன்பர்களுக்குத் தாபமும் தாகமும் போக்கியிருக்கிறது! ஆண்டி, அரசன் முதலான பலரும் வேற்றுமையின்றி அண்ண மலையைப் போற்றிப் பேறு பெற்றிருக்கின்றனர். தொண்டக் குலம் ஒரு குலம்தானே. **ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்** என்பது திருமூலர் திரு வாக்கு.

திருவண்ணமலையைத் தரிசித்துப் பேறு பெற்ற வர்களில் வச்சிராங்கத பாண்டியன், வல்லாள மகா

ராஜன் என்ற மன்னர்களையும் சிறப்பாய்க் குறிப்பிடுவதுண்டு.

திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர் கி. பி. பதினைந்தாவது நூற்றாண்டின் இடைப்பகுதியில் பிரபுட தேவ மகாராஜன் காலத்தில் திருவண்ணாமலையில் வாழ்ந்து சிறந்த முருக பக்தராக விளங்கினார்.

சில நூற்றாண்டுகளுக்கு முன் குகை நமசிவாயர் இத்தலத்திற்கு வந்து மலையடிவாரத்திலுள்ள குகையொன்றில் தவம் புரிந்தார். இவர் 'அருணகிரி அந்தாதி' முதலிய சில நூல்களை இயற்றினார். இப் பெரியாரைக் கன்னட தேசத்து வீர சைவ மரபினர் என்பர்.

இவருடைய சீடர் குருநமசிவாயர். குருவினும் மேம்பட்ட பக்குவம் வாய்ந்தவர். இவர் இயற்றிய நூல்களில் மிகச் சிறந்தது 'அண்ணாமலை வெண்பா.' இச்சீடருடன் குகை நமசிவாயர் தவஞ் செய்து கொண்டிருந்த குகையை இன்றும் காணலாம். இந்தக் குகையின் மேல்புறம் உள்ளது விரூபாட்ச குகை.

குகைநமசிவாயர்—குருநமசிவாயர் காலத்தில் வாழ்ந்த விரூபாட்ச தேவர் தவம் புரிந்த குகை தான் விரூபாட்ச குகை, இக்குகையின் மேல்புறத்தில் உள்ளது ஸ்கந்தாச்ரமம்.

இம்மலைக் குகைகளிலும் பக்கத்துக் காடுகளிலும் தவத்தையே தனமாகக் கொண்ட முனிவர்களும்

யோகிகளும் வாழ்ந்து வந்தனர். சித்தர்களும் வசித்து வந்தனர்,

திருவண்ணுமலையில் வாழ்ந்த ஞான தபோதனர் களில் ஈசான்ய ஞான தேசிகர், அற்புதமான சித்திகள் எய்தப் பெற்றவராய் ஆத்ம நிஷ்டராய் நெடுங்காலம் இந்தப் புனித ஸ்தலத்தில் அண்ணுமலையாரின் பேரரு ளுக்குச் சான்ருகும் சான்ருேராய்த் திகழ்ந்தார்.

இந்தத் திவ்ய க்ஷேத்திரத்திலே ஈசான்ய பாகத்தில் எழுந்தருளியிருந்ததால் ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர் என்று பெயர் பெற்ருர். இப்பெரியாரது சமாதிக் கோயிலைச் சார்ந்து ஈசான்ய மடாலயம் அழகு பெற அமைந்திருக்கிறது.

இந்தக் குருமூர்த்தியின் வரலாற்றுக் குறிப்புகள் ஏற்கெனவே வெளியிடப் பெற்றிருக்கும் குறிப்பு களைத் தழுவி இங்கே எழுதப்படுகின்றன.

'புலியுடனே விளையாடும் புனிதன்' என்று போற் றப் பெறும் இப்புண்ணிய மூர்த்தியின் திவ்ய சரித்திரம், திருவண்ணுமலையின் ஞான தீபமாக அன்பர்களின் அகக்கண்ணுக்கு இலக்காகி, அருள் நெறியிலும் பக்தி நெறியிலும் செல்வதற்கு ஒரு நல்ல பெரு வழி காட்டும் என்பது திண்ணம்.

## II. அதிசயச் சிறுவர்

அருணையம்பதி என்ற திருவண்ணாமலையில் ஈசான்யத்தில் 'அருளுருவாய்' அடியவர்கட்கு அருள் முகிலாய், அகண்டாகாரப் பொருளதுவாய்ப் 'புலியுடனே விளையாடும் புனித' மூர்த்தியாய் விளங்கிய ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர், சுமார் 250 ஆண்டுகளுக்கு முன் ராய வேலூரில் தோன்றினார்.

கிளைவ் துரை பிளாஸி யுத்தத்தில் வெற்றிபெற்று ஆங்கில ஆட்சியை இந்தியாவில் உறுதிப்படுத்திய 1757-ம் ஆண்டுக்கு முன்பே தமிழ்நாட்டில் பிரிட்டிஷ் ஆதிக்கம் தோன்றிவிட்டது.

அந்நாளில்—பிளாஸி யுத்தத்திற்குக் கால் நூற்றாண்டுக்கு முன்பு— ராய வேலூரில் வேளாளர் குலத்திலே திருநீலகண்ட தேசிகர் தமது வாழ்க்கைத் துணைவியாருடன் இல்லறம் நடத்தி வந்தார். அவர் பக்திச் செல்வர். தமக்கு ஒரு புதல்வன் இல்லாமல் நெடுநாளாக வருந்தித் திருவண்ணாமலையிலுள்ள முருகப் பெருமானை உபாசித்து வந்தார். அப்பெருமானருளால் குழந்தைப்பேறு கிடைத்தது. அதனால் குழந்தைக்குக் **கந்தப்பன்** என்னும் திருப்பெயரைச் சூட்டினார்.

கந்தப்பர் குழந்தைப் பருவத்திலேயே தம் பிற்கால ஞானப் பெருவாழ்விற்கு உரிய சில முற்குறிகளை வெளியிடலானார். பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர்

பாடங்களைக் கற்பிக்கும் முன்னமே அப் பாடங்களை ஒப்பு வித்துவிடுவார். பிறகு மௌனமாயிருப்பார்.

ஓதாது உணரும் மேதையாகத் தோன்றியிருந்த இந்த அதிசயச் சிறுவருக்கு, நிஷ்டைகூடி மௌனமா யிருக்கும் நிலை அந்த இளமைப் பருவத்திலேயே அதிசய மாய்க் கைகூடிவிட்டது. அது கண்டு உபாத்தியாயர் ஆச்சர்யமடைந்தார். ஊராரும் பெரு வியப்புற்றனர்.

படிப்பைக் காட்டிலும் விளையாட்டிலே சிந்தை செல்லக்கூடிய அந்தப் பருவத்திலேயே, கந்தப்பர் சில அதிசயத் திருவிளையாடல்கள் புரிந்தார். ஒரு சமயம் மூன்று நாள் யாரும் அறியாவண்ணம் மறைந்திருந்தார்.

இத்தகைய செயல்களைக் கண்டு இவரது தந்தை யாரான திருநீலகண்ட தேசிகர் இவருக்கு ஏழாவது வயதி லேயே தம் வேளாள மரபினருக்குச் சிவதீக்ஷை செய்விக் கும் குரு நிலையை விளக்கும் தேசிகர் என்ற பட்டம் சூட்டி, சிவபூஜை முறைகளையும் கற்பித்தார். அன்றுமுதல் கந்தப்ப தேசிகர் தம் பதினுருவது வயது வரை நியமத்துடன் சிவ பூஜையில் ஈடுபட்டிருந்தார். இத்தகைய மனநிலையில் இடையருது தியானத்துடன் கூடியிருப்பர்.

தந்தையார், தம் அருமைப் புதல்வருக்குத் திரு மணம் செய்து கொள்வதற்கு உரிய பருவம் வந்து விட்ட தென்று கருதினர். கருதி, உறவினர் வீடுகளில் ஒரு கன்னிகையைத் தேடுவாராயினர். ஆனல் மைந்தரின்

உள்ளமோ தியான வாயிலாக உண்மையைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆத்ம ஞானத்தையல்லவா தேடிக் கொண்டிருந்தது?

தந்தையார் மணமகளைத் தேடிச் சென்றிருக்கும் போது மைந்தனுர் தம் அன்னையாரை நாடிவந்து, 'அம்மா, நான் சம்சாரியாகமாட்டேன்; நமது பரம்பரையை ஆட் கொண்டுள்ள சிவபெருமான் வீற்றிருக்கும் திருப்பதிகளைத் தரிசித்து இன்புற விரும்புகிறேன்' என்று கூறினுர். அன்னையார் எப்படியோ அந்த விருப்பத்திற்குக் குறுக் கிடவில்லை, இணங்கிவிட்டார்.

எல்லாம் சிவனருள்தான் என்று கந்தப்ப தேசிகர் அன்னையாரிடம் விடைபெற்றுக் கொண்டு அப்படியே தீர்த்தயாத்திரை செய்யப் புறப்பட்டுவிட்டார்.

அங்கங்கே உள்ள புண்ணிய தீர்த்தங்களில் முழு குவார். ஜபத்திலும் தியானத்திலும் ஈடுபடுவார். மூர்த் திகளைத் தரிசித்துத் துதி செய்வார். இப்படியெல்லாம் தம்மைப் பக்குவப்படுத்திக்கொண்டே, தலங்களில் சிறந்த தில்லைத் தலத்தை நோக்கி நடந்தார்.

உள்ளது உணராதவர் உறவைத் தள்ளவேண்டும், ஞானகுருவின் நல்லுறவை நாடவேண்டும் என்ற உணர்ச்சி இவர் உள்ளத்திலே தழைத்துக் கொண்டிருந்தது.

ஈன ஜட வடிவம் ஞானச் சுக வடிவமாக வேண் டும் என்ற ஆசை, இவரை அறியாமலே சிவ க்ஷேத்தி

ரங்களில் மிகச் சிறந்த சிதம்பரத்தை நோக்கிச் செலுத்தியது. மற்ற ஸ்தலங்களில் தாம் வழிபட்ட மூர்த்திகளெல்லாம் இதய ஸ்தானமாகிய சிதம்பரத்தில் ஒடுங்கித்தானே மீண்டும் அந்த அந்த ஸ்தலத்திற்குத் திரும்புகின்றன?

இந்த விசேஷ ஸ்தலம் கந்தப்ப தேசிகரை ஆகர்ஷித்தது. நடராஜ தரிசனத்துடன் குருதரிசனமும் கிடைக்க வேண்டுமல்லவா?

## III. ஆசான் அருள்நோக்கு

'செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே' என்றும், 'இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே' என்றும் திருஞானசம்பந்தர் பாடியுள்ள பூலோக கயிலாயமாகிய தில்லையம்பதி தில்லைவனமாக இருந்த காலத்திலே வியாக்கிரபாதர், பதஞ்சலி என்ற இரு முனிவரும் ஸ்தல லிங்கமாகிய திருமூலநாதரைப் போற்றி, எம்பெருமானின் நடன தரிசனம் காணவேண்டுமென்று நீண்ட காலமாகத் தவங்கிடந்தனர். அம்முனிவர்களின் தவத்திற்கு இரங்கிச் சிவபெருமான் ஸ்ரீ நடராஜமூர்த்தியாகச் சிதம்பரத்திலே இன்றும் காட்சியளிக்கிருர்.

கோயில் என்ருலே சிதம்பரம் தான். ஆலயம் அளவிலும் பெரிது. கோபுரங்களின் அமைப்பும் சித்திர வேலைப்பாடுகளும் மண்டபங்களின் அழகும் சிற்ப விசித்திரங்களும் கண்டவர் உள்ளங்களைக் கொள்ளைகொள்ளும். தேவசபை கனகசபை முதலிய அற்புத சபைகளும் கண் கொள்ளாக் காட்சியாகும்.

திருச்சிற்றம்பலம் எனப் பெரியோர் புகழ்ந்து போற்றும் சிதாகாச வடிவினைத்தான் **இரகசியம்** என்பர். இரகசியமென்று சொல்லப்பெறும் இடத்திலிருந்து நடராஜப் பெருமான் எழுந்தருளியிருக்கும் இடம் வரையிலுள்ள பீடம் பிரணவ பீடம்.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களும் இறைவனது ஆனந்த

நடனமாகும். 'மாயா பாசத்தால் கட்டுண்டிருக்கிறேமே' என்பதை உணர்ந்து சச்சிதானந்த நிலே அடைய முயல் வோருக்கு ஆனந்த நடன தரிசனம் ஓர் அரும்பெருஞ் சாதனமாகும்.

இத்தகைய மனநிலேயிலிருந்த கந்தப்ப தேசிகர், ஞானயாத்திரிகர்கள் சிதம்பர தரிசனம் செய்யவேண்டிய முறைப்படி ஜபதபங்கள் செய்து ஸ்ரீ நடராஜப் பெருமானேத் தரிசித்தார்.

**கற்பனே கடந்த சோதி**
**கருணேயே உருவமாகி**
நடஞ் செய்கின்ற பூங்கழல் போற்றினர்.

கனக சபேசரைத் தரிசித்தபின் குருதரிசனமும் கிடைத்தது. ஸ்ரீ சபாநாயகருக்கு ஒரு நித்திய அகண்ட தீபக் கட்டளே ஏற்படுத்தித் தில்லேவாழ் அந்தணர்களால் செப்புப் பட்டயம் அளிக்கப்பெற்றிருந்த சித்த புருஷரான ஸ்ரீ மௌனசுவாமிகள், சிதம்பர க்ஷேத்திரத்தில் நகருக்குத் தெற்கேயிருக்கும் ஆயிகுளத்தின் வடகரையில் தியான வாயிலாகச் சமாதி நிலே பெற்று விளங்கினர்.

ஸ்ரீ மௌன சுவாமிகளேத் தரிசித்ததும் கந்தப்பதேசி கருக்கு, 'நாமும் துறவியாகி நிஷ்டானுபூதி நிலேயில் நின்று சிவஞான போதநிலே பெற வேண்டும்' என்னும் எண்ணம் ஏற்பட்டது. அதற்காக உபதேசம் பெற வேண்டுமென்று தீர்மானித்தார்.

'இதம் பெற வைப்பார் சிதம்பர ஞான தேசிகர்' என்று நம்பினர். மருள் நீங்கத் தமக்கு அருள் பொழியவே

ஓங்கிய நிஷ்டை சாதித்து உத்தம குருவடிவமாகி ஸ்ரீமௌன சுவாமிகள் தரிசனம் அளித்ததாக உறுதியாய் நம்பினார்.

சிதம்பர க்ஷேத்திரத்திலேயே பிக்ஷையால் சரீர-தாரணம் செய்து கொண்டு காலை மாலை என்னும் இரண்டு வேளைகளிலும் ஸ்ரீமௌன சுவாமிகளைத் தரி-சித்து வந்தார். இப்படிக் கொஞ்சகாலம் கழியவே ஒரு நாள், 'நாம் பக்குவமடையாததால் அல்லவா இப்பெரியார் நமக்கு உபதேசம் செய்யவில்லை?' என்ற எண்ணம் ஏற்-பட்டது.

விரக்தி தீவிரமாயிற்று. அதிதீவிர நிலையும் உற்றது. கந்தப்ப தேசிகர் பளிச்சென்று தாம் தரித்திருந்த ஆடை-களை நீத்துக் கௌபீனதாரியாகி ஸ்ரீமௌன சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றார்.

மார்கழி மாதம். பனியும் குளிரும் அதிகம். தேசி கரோ கொஞ்சமும் அஞ்சவில்லை. அன்று மழையும் பெய்_ தது. அந்த மழையில் நனைந்து கொண்டே நெஞ்சம் அஞ்சாமல் உடல் நடுக்கமும் இன்றி வந்து தம்மை வணங்கிய தேசிகரைக் கண் குளிர நோக்கினார் ஸ்ரீமௌன சுவாமிகள்.

அன்று யாரோ தம்மீது போர்த்தியிருந்த கம்ப ளத்தை ஸ்ரீ மௌன சுவாமிகள் அப்படியே எடுத்துத் தேசிகருக்குப் போர்த்து விட்டார். உணர வேண்டிய உண்மையையும் உபதேசித்தார். அப்போதே அங்கேயே தியானத்தில் அமரச் செய்தார்.

அந்த அருள் விழிப் பார்வையால், அந்தத்தியான விசேஷத்தால், நெடுநாளாகச் சூரியன் இல்லாமல் ஒரே இருட்டாகியிருந்த வானம் தெளிந்து ஒளி பெற்றது போன்ற மெய்யுணர்வு பிறந்தது. அஞ்ஞான ராத்திரி கழிந்து விட்டது. சூரியன் முன் இருள் நின்றாலும், ஊடுருவிப்பார்வை செய்து உண்மை இது வென்றுகாட்டிய இந்தக் காட்சிக்கு முன் அஞ்ஞானம் நிற்கவே முடியாது எனக்கண்டு கொண்டார் தேசிகர்.

'ஒளி வீசி உன் அருளுதயமாகிய பேரின்ப நிஷ்டை அருள்வாய்' என்ற சீடரின் பிரார்த்தனைக்கு இரங்கியும் இணங்கியும் குருமூர்த்தி அருளானந்த வடிவமாகி ஞான முத்திரை பிடித்து உண்மை உணர்த்தி விட்டார்.

வேதாந்த சித்தாந்த சமரஸம் உணர்த்தி விட்டார் சிவஞான குரு. 'சமயநிலை யாவையும் ஒரு சமனதாகவே, தாம் கண்ட உண்மையையும் உணர்த்திய சிதம்பர மௌன குருநாதரை ஸ்ரீ நடராஜ மூர்த்தியாகவே நம்பினார் தேசிகர்.

'நித்ய பரிபூரண!' என்று தொடங்கி ஸ்ரீதேசிகர் தமது குருமூர்த்திக்குப் 'பஞ்ச ரத்தினம்' என்னும் ஒரு தோத்திரப் பாமாலை அணிவித்தார். குருவின் 'சத்தியஅருள் மேனி'யை அழகு செய்தது பஞ்சரத்தின மாலை.

சஞ்சல மனத்தையும் வஞ்சகப் புலன்களையும் வென்று வலியழித்து வாகை சூடினார் சீடர், தஞ்சமெனக் குரு அருளை நம்பி.

இந்த ஞானம் பெறுவதற்கு முன் கற்ற நூல்களும் கலைகளும் பயனற்ற அறிவுதான் என்பதை நன்குணர்ந் தார். 'சித்தமது தெளிய ஒரு வித்தை' குருவருளால் கிடைத்துவிட்டது மயக்கம் மாய்ந்தது. துக்கம் தொலைந் தது.

சித்தர்களுக்குரிய யோகதண்டு யோகப்பட்டை முத லியன கைக் கொண்டு ஜடாமகுடம் தரித்து ஸ்ரீமௌன சுவாமிகளிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டார் ஸ்ரீகந்தப்ப தேசிகர்.

## IV சமாதியும் இடையூறும்

சிதம்பரத்திலே கிடைத்த ஞான-பொக்கிஷத்துடன் புறப்பட்டுத் தேசிகர் திருவாரூரை அடைந்தார். அங்கே ஸ்ரீ தியாகராஜப் பெருமானைத் தரிசித்து மடப்புரத்தில் மகா சித்த மூர்த்தியாக வீற்றிருந்த ஸ்ரீதட்சிணாமூர்த்தி சுவாமி களுடன் சிலகாலம் கூடியிருந்தார்.

உலகமாகிய புருஷ வடிவத்திற்குச் சிதம்பரம் இதயமென்றால், திருவாரூரை மூலாதாரம் என்பர். இத் திருவாரூர்த் திருநகரில் கொஞ்ச காலம் தங்கியபின் தேசிகர் ஸ்ரீதட்சிணாமூர்த்தி சுவாமிகளிடம் விடை பெற் றுக் கொண்டு புறப்பட்டார்.

திரு நாகைக் காரோணம் அருகில் சிக்கல் என்ற க்ஷேத்திரத்தை அடுத்த பொருள் வைத்த சேரியில் **ஸ்ரீ உகந்தலிங்க ஞான தேசிகர்** பிரம்மானுபவ நிஷ்ட ராய்ப் பல சீடர்களுக்கு ஞானோபதேசஞ் செய்து கொண் டிருப்பதாகக் கேள்விப்பட்டார். தேசிகர் அவரைத் தரி சித்து அங்கே கொஞ்சகாலம் வாசஞ் செய்து அப் பெரி யாரிடம் வேதாந்த உண்மைப் பொருளை உணர்ந்தார்.

அப்பால், நிர்விகல்ப சமாதி கூடவேண்டுமென்று தீர்மானித்தார். அதற்காக மனித சஞ்சாரம் இல்லாத ஒரு பிரதேசத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டு மென்று கருதி னார். எனவே ஸ்ரீஉகந்தலிங்க ஞான தேசிகரிடம் விடை பெற்றுப் புறப்பட்டு வடதிசையாக வந்தார்.

திருவண்ணாமலைக்கு அடுத்த வேட்டவலத்திற்குச் சமீபமான பாக்கத்து மலையில் ஒரு குகையிலே யாரும்

அறியா வண்ணம் பல ஆண்டுகள் நிர்விகல்ப சமாதி கூடியிருந்தார்.

அப்போது அவ்வூர்வாசியான முத்துசாமி உடையார் என்பவர் தாம் மேய்த்துவந்த மாடுகளில் பால் கறந்து நாள்தோறும் தேசிகருக்குக் கொடுத்து வந்தார். சித்த புருஷர்களுக்குச் செய்யும் உபகாரம் வீணுகுமா?

உடையார் வீடு கட்டுவதற்கான அடிப்படை நிலத்தைத் தோண்டினுர். அப்போது அவருக்கு நிதிக் குவியல் ஒன்று கிடைத்தது. புதையலெடுத்த தனம் போலக் கிடைத்தது உடையாருக்குத் தேசிகரின் அருள். அந்த அருளால் புதையலும் கிடைக்கவே, உடையார் பெரும் செல்வமுடையவராஞர்.

ஊராருக்குப் பொருமை அதிகரித்தது, 'குகையில் தவம்புரியும் பெரியார் தான் இரசவாதத்தால் முத்துசாமி உடையாருக்குச் செல்வம் அளித்திருக்கிருர்' என்று நம்பினுர்கள். மருண்ட மனத்தராய்த் தேசிகரிடம் வந்தார்கள்.

பலவிதமாய்த் துதித்தார்கள். சுவாமிகளே, முத்துசாமி உடையாருக்கு அனுக்கிரகம் பண்ணியது போல் எங்களுக்கும் அனுக்கிரகம் செய்யவேணும் என்றெல்லாம் சொல்லித் தேசிகரின் நிஷ்டைக்கு இடையூருய்க் கூட்டம் கூடினுர்கள்.

எனவே, ஸ்ரீதேசிகர் யாரும் அறியா வண்ணம் அந்த இடம் விட்டுப் புறப்பட்டார்.

## V. அருணையார் கருணை

பிறகு ஸ்ரீதேசிகர் அண்ணுமலைக்குத் தென்மேற்கிலுள்ள கோரக்கநாதர் குளக்கரைமேல் நிஷ்டை கூடியிருந்தார். அங்கே மாடு மேய்ப்பவர் பலரும் பால் முதலான உணவுப் பொருள்களைத் தேசிகருக்கு அளித்து வந்தனர். தேசிகரும் உவந்து ஏற்றுக் கொண்டார்.

அவ்வூரிலிருந்த அருணுசலம் செட்டியார் என்பவர் நெடுநாளாய்த் தமக்குப் புதல்வன் இல்லையே என்று மனம் வருந்திக் கொண்டிருந்தார். கோரக்கநாதர் குளக்கரையில் நிஷ்டை கூடியிருந்த தேசிகரைக் கண்டு வணங்கித் தொண்டு புரிந்து வந்தார். இப்பெரியார் அருளால் தமக்குப் புத்திர பாக்கியம் கிடைக்குமென்பது செட்டியாரின் நம்பிக்கை.

நம்பிக்கை பழுத்துப் பலன் அளித்தது. அருணுசலம் செட்டியாருக்கு வேலாயுதம் என்ற புதல்வர் பிறந்தார். வேலாயுதம் செட்டியாரின் புதல்வராகிய முருகப்ப செட்டியாரும் தமது பாட்டனுருக்கு ஸ்ரீதேசிகர் அளித்திருந்த விபூதிப்பையை வைத்துப் பூஜித்து வந்தார். அக்குடும்பத்தினர் இன்றளவும் அந்த அருட் சின்னத்தைப் பூஜித்து வருகின்றனர். அதனுல் தங்களுக்கு வரும் இடையூறுகள் நீங்கிப் போகின்றன என்பது அவர்களது நம்பிக்கை.

ஸ்ரீதேசிகர் பாக்கத்து மலைக் குகையை விட்டு யாரும் அறியாது வந்துவிட்ட அந்த நாள் முதல் பாக்

கத்துக் கிராமவாசியான முத்துசாமி உடையார் மழை முகம் காணுத பயிர்போல் மனம் மிகவாடித் துயருற்றிருந் தார். அப்போது பக்தி விசுவாசமுள்ள உடையாருக்கு ஒரு கனவு தோன்றியது.

அக்கனவில் அண்ணுமலேயார் ஸ்ரீ தேசிகரைப் போல் தோன்றி, 'அப்பா, நீ வருந்தவேண்டாம், நாம் அருணுசலத்தின் ஈசான்ய பாகத்தில் இருக்கிருேம். அங்கு நீ வரக் கடவாய்' என்று திருவாய் மலர்ந்தருளினுர்.

பிறகு அண்ணுமலேயார் தேசிகருக்குத் தரிசனம் அளித்து, 'அப்பா, உன்னேக்காண ஓர் அன்பனே ஈசான்ய திசைக்கு வரச்சொல்லியிருக்கிருேம்; நீயும் அங்கே போகக் கடவாய்' என்று அருளிச்செய்து அந்தர்த்தானமாயினர்.

அண்ணுமலேயாரின் கருணேத்திறனே நினேந்து உருகி ஸ்ரீ தேசிகர் அண்ணுமலேயார் மீது 'தோத்திரப் பாமாலே' என்னும் சில அருட்பாடல்களேப் பாடினுர். பாடிக் கொண்டே ஈசான்ய திசைக்கு எழுந்தருளி வந்து, மாமரங் களும் செடிகளும் சூரைப்புதர்களும் நெருங்கியிருந்த ஈசான்ய தீர்த்தத்தின் தென்கரையிலுள்ள ஒரு பெரிய ஆல மரத்தின் கீழே சிவயோக சமாதியில் அமர்ந்து சுந்தர ஞானச் சுடராக விளங்கினுர்.

அருணேயார் கருணே பலித்தது.

## VI. அருளே சேமநிதி

முத்துசாமி உடையாரென்னும் அன்பர் பொதிமாட் டில் அரிசி முதலியவற்றை ஏற்றிக்கொண்டு வந்து ஸ்ரீ

தேசிகரைத் தரிசித்தார். அடங்காத மகிழ்ச்சியுடன் அடியவர்களுக்கு அமுதளித்தார், ஸ்ரீ தேசிகரை விட்டுப்பிரிய மனமில்லாதவராகவே விடைபெற்றுத் திரும்பினுர். இடையிடையே மீண்டும் மீண்டும் வந்து தேசிகரைத் தரிசித்துப் போவதுண்டு.

அக்காலத்தில் ஸ்ரீ தேசிகர் அறுபது வயதும் நீண்டு பரந்த ஜடாபாரமும் உள்ளவராய், சதா சமாதி யோக நிஷ்டாபரராய் விளங்கினுர். ஓயாமல் அருளை நாடிய உள்ளம், ஆனந்த பரமகுருவான அண்ணுமலையாரின் அருளைப் பூர்ணமாகப் பெற்று வழங்கியது,

ஸ்ரீ தேசிகர் நிஷ்டை கூடியிருக்கும் காலத்தில் இடையூருென்றும் நேராதபடி புலி காவலாய்ப் படுத்திருக்கும். நிஷ்டை கலைந்ததும் ஸ்ரீ தேசிகர், 'அண்ணுமலையாரே இவ்வடிவம் தாங்கி நமக்குக் காவலாயிருக்கிருர்' என மகிழ்வுற்று, 'அண்ணுமலையே, என்னரசே!' என அழைத்துப் புலிமீது தம்கைகளால் தடவிக்கொடுப்பார்.

வரிப்புலிகள் காவல்புரிய வீற்றிருந்த தேசிகரை அன்பர்கள் தரிசிக்க வரும்போது இவர் அப்புலிகளை நோக்கி, 'அவர்கள் அஞ்சுவர், சற்றே விலகியிருங்கள்' என்று கூறுவார். மெய்யன்பிற்கும் யோகசக்திக்கும் காட்டுப் புலிகளும் வசமாகும் என்பது சித்த புருஷர்களின் அனுபவம்தானே. 'கரடி வெம்புலி வாயையும் கட்டலாம்' என்ற வாக்கும் பொய்யாகுமா?

காட்டுப் புலிகளையும் வசமாக்கிய மெய்யன்பும் மெய்யுணர்வும் சுவானுபவத்துடன் நாட்டு மக்களையும் வசீகரித்

துப் பலருக்கும் துன்பம் போக்கியதில் அதிசயமில்லை. கூட லூரைச் சார்ந்த புதுப்பாளையம் என்னும் கிராமத்தில் வசித்த ஒரு நாயக்கர் தமக்கு உற்ற சூலைநோய் என்னும் பெரும் பிணியால் வருந்திக் கொண்டிருந்தார். அவர் ஸ்ரீ அருணசலக்ஷேத்திரத்திற்கு வந்து கிரி பிரதட்சிணம் செய்து வருகையில் ஸ்ரீ தேசிகரைத் தரிசித்தார். இப்பெரியாரை வலம் வந்து வணங்கினர். இவர் கருணையால் அந்த வியாதி விலகிற்று.

அக்காலத்தில் அருணசலத்திலிருந்து விருத்தாசலம் வரையிலும் ஜில்லா கலெக்டரின் அதிகாரம் ஐடன் துரை என்பவருக்கு இருந்தது. அவர் ஸ்ரீ தேசிகரின் மகிமையைக் கேள்வியுற்று வந்து தரிசித்தார். தேசிகர் அருளால் துரைக்கு இருந்த காச நோய் நீங்கிவிட்டது.

துரை பயபக்தியுடன் ஸ்ரீ தேசிகரை நோக்கி 'தேவரீருக்கு எவ்வளவு நிலபுலன்கள் வேணுமானலும் தானசாஸனம் செய்துவைக்கிறேன்' என்றார். அது கேட்ட ஸ்ரீ தேசிர் புன்னகை புரிந்து, 'அதோ இரண்டு குழந்தைகளுடன் ஒரு பெருங்குடும்பி இருக்கிறன், அவனுக்கு எவ்வளவு பூமி தானம் செய்தாலும் தகும்; பரதேசியான நமக்குத் தகாது' என்று சொல்லி ஸ்ரீ உண்ணுமுலை சமேத அண்ணமலையாரைச் சுட்டிக்காட்டினர்.

பின்பு ஒரு சமயம் ஐடன்துரை பெண்ணை நதிக்குத் தெற்கில் இருக்கும்போது அண்ணமலையாரின் ரதோத்ஸவ காலம் மிகவும் சமீபித்துவிட்டதென்று தெரியவந்தது.

அந்தப் பெருவிழாவை நடத்தி வைப்பதற்காக ஐடன்துரை திருவண்ணுமலையை நோக்கி வந்துகொண்டிருந்தார். அப்போது அதிகமழைபெய்து பெண்ணை நதி இரு கரையும் புரண்டு வெள்ளமிட்டுப் பெருகி ஓடியது, ஐடன்துரை திகைத்து அக்கரையிலே குதிரைமேல் இருந்த வண்ணம், 'குதிரையே!தாத்தாவைப் பார்க்க வேண்டும்; இரதத்தையும் நடத்தவேண்டும் நட' என்று சொல்லிக்கொண்டே குதிரையோடு ஆற்றில் இறங்கி விட்டர்.

அப்போது ஸ்ரீ ஈசான்ய தேசிகர் தாம் இருந்த இடத்தில் தியானத்திலிருந்து கண் விழித்துத் தென்புறமாகத் திடீரென்று கையை நீட்டி இடது பக்கம் மெதுவாகத் தாழ்த்தினர். அதனை அருகிருந்து பார்த்த நாகை இராமலிங்க சுவாமிகள், ஸ்ரீ தேசிகரின் அந்தச் செயலுக்கு உரிய காரணத்தை அறிய விரும்பிப் பிரார்த்தித்தார். அதற்கு ஸ்ரீ தேசிகர், 'எவன் ஆற்றில் விழுந்தாலும் அதற்கு நாம் உத்தரவாதியாக வேண்டுமாம், என்று விடை பகர்ந்து மௌனமாயிருந்தார்.

ஐடன்துரை சுகமாக வந்து சேர்ந்து ஸ்ரீ தேசிகரைத் தரிசித்து, 'தேவரீரது கிருபையால் ஆற்று வெள்ளத்தைத் தாண்டி வந்தேன்' என்று சொல்லிப் பரவசமானுர்.

இத்தகைய திருவிளையாடல்களைக்கண்டும் கேட்டும் அன்பர்கள் ஸ்ரீ தேசிகரது சன்னிதிக்கு வந்த வண்ணமாயிருந்தனர். அவர்களில் சிலர் சம்சாரப் பெரு வெள்ளத்தையும் தாண்ட வேண்டுமென்ற மோக்ஷசாதன விருப்பமுள்ள பக்குவிகளாயிருந்தது கண்டு அவர்களுக்காகத்

தேசிகர், **ஞானக் கட்டளை** என்னும் பெயருள்ள ஓர் அரிய நூலினை இயற்றி உபதேசிக்கலானார். அந்த அடியவர்கள் வசிப்பதற்காக ஸ்ரீதேசிகர் விரும்பியவாறு திருவண்ணாமலைவாசிகள் ஒரு பர்ண சாலை அமைத்துக் கொடுத்தனர்.

ஸ்ரீ கோவிலூர் முத்திராமலிங்க ஞான தேசிகர் ஈசான்ய ஞான தேசிகரைத் தரிசித்துப் போகலாமென்று வந்தபோது, ஸ்ரீ தேசிகரின் ஏவல் பூண்டிருந்த முத்துசாமி உடையார் முத்திராமலிங்க ஞானதேசிகரின் விரலில் கல்லிழைத்த மோதிரம் ஒன்றைப் பார்த்தார். பார்த்து, 'இது மிகவும் அழகான பிரகாசம் உடையது' என்றார். அது கேட்டதும் முத்திராமலிங்க ஞான தேசிகர், 'இந்தப் பிரகாசம் உனக்கே இருக்கட்டும்' என்று அந்த மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்து விட்டார். அப்படித் தமது பற்றற்ற நிலையை நன்கு விளக்கி அத்தேசிகர் ஈசான்ய தேசிகருடன் கொஞ்ச காலம் தங்கிவிட்டுக் கோவிலூருக்குத் திரும்பினார்,

திருவண்ணாமலைக்கு அடுத்த மண்ட குளத்தூர் வாசியான சபாபதி சுவாமிகள் காஞ்சி ஸ்ரீ காமாட்சி அம்மையின் அருள் பெற்று ஈசான்ய தேசிகரை அடைந்து தொண்டாற்றி வந்தார். அவரது பக்குவத்தைக் கண்ட ஸ்ரீதேசிகர் ஆன்ம உபதேசம் செய்து அவரைத் தியானத்தில் அமரச் செய்தார். ஆனால் நிஷ்டை கூடவில்லை. ஸ்ரீசபாபதி சுவாமிகளுக்கு வடமொழியில் அதிக பாண்டித்யம் உண்டு. எனவே, 'நீர் வித்யாதானம் செய்தால் பிரதிபந்தம் நீங்கி

நிஷ்டை கூடும்' என்று ஸ்ரீதேசிகர் அருளிச் செய்தார். சபாபதி சுவாமிகளும் அப்படியே வித்யாதானம் செய்து நிஷ்டை கூடியிருந்தார்.

பிறகு சபாபதி சுவாமிகள் மேட்டுப் பாளையத்தில் எழுந்தருளி, சீடர்களுக்கு வேதாந்த பாடம் ஓதுவித்தும், சில அற்புதங்கள் நிகழ்த்தியும், ஸ்ரீதேசிகரின் மகிமைக்குச் சான்ருக விளங்கினர். அங்கே மடமும் ஆலயமும் கட்டப் பெற்று நித்திய பூஜை முதலியன நடந்து வருகின்றன.

கோரக்கநாதர் குளக்கரையில் அண்ணுமலையார் தரிசனம் கொடுத்த காலத்திலே தாம் இயற்றிய அண்ணுமலையார் தோத்திரப் பாமாலே, வெண்பா, அந்தாதி, கண்ணி முதலிய பிரபந்தங்களே ஸ்ரீதேசிகர் பல சீடர் களுக்கும் உபதேசித்துக் கொண்டிருக்கும் காலத்திலே, ஸ்ரீ உகந்தலிங்கஞான தேசிகரின் விதேக காலம் தொடங்கியதென்று உணர்ந்து கொண்டார். கடந்த ஞானியரும் ஆத்ம பந்துக்கள் மீதுள்ள சிநேக வாஞ்சையைக் கடப்பதில்லே. ஆகவே ஸ்ரீதேசிகர் சீடர்கள் புடைசூழப் புறப்பட்டுச் சென்று பொருள் வைத்த சேரியை அடைந்து ஸ்ரீஉகந்தலிங்க ஞானதேசிகரைத் தரிசித்தார். சகவாச அன்பால் ஸ்ரீ தேசிகரின் வரவை எதிர்பார்த்திருந்த ஸ்ரீ உகந்தலிங்க ஞான தேசிகரும் மனமகிழ்வுடன் விதேக கைவல்யம் அடைந்தார்.

அப்பால் திருவண்ணுமலேக்குத் திரும்பி வந்து ஸ்ரீ தேசிகர் வழக்கம் போல் ஆத்மோப தேசங்களிலும், நோய்களேயும் துன்பங்களேயும் நீக்கியருளும் அன்புத்

திருவிளையாடல்களிலும் ஈடுபட்டிருந்தார். அப்படியிருக்கும் போது தமது விதேக கைவல்ய காலத்தை முன் கூட்டியே உணர்ந்து கொண்டார்.

சில தினங்களுக்கு முன்பே ஓலை நறுக்கு ஒன்றில் தாம் பரிபூரணமாகும் காலத்தை வரைந்து தமது ஆசனத்தின் கீழ் வைத்து விட்டார். குறித்த தினத்தில் தமது முக்கிய சீடர்களை நோக்கி, 'ஸ்ரீநடராஜப் பெருமான் (ஆயிரக்கால் மண்டபத்தில்) அறைக்கட்டுக்குப் போகிறார், நாமும் அங்குப் போகவேண்டும்!' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

அப்பால் ஸ்ரீதேசிகர் பத்மாசனத்திலிருந்து உத்தர முகமாய்ச் சின்முத்திரை தரித்துச் சிறிது அலர்ந்த நோக்காய்ச் சமாதிகூடி அகண்ட சச்சிதானந்த பிரம்ம பாவத்தை அடையும்போது, முத்துசாமி உடையார் 'அடியோங்களுக்குக் கதியாதோ?' என வினவினர், அதற்குத் தேசிகோத்தமர், உமது குடும்பம் முன்னமே கொத்தோடு பழுத்துப் போயிற்றே' என்று திருவாய் மலர்ந்தருளிப் பரிபூரண பாவத்தை அடைந்தார்.

ஸ்ரீ ஈசான்ய ஞானதேசிகரின் பரிபூர்ண காலம்: கலியுகம் 4930-க்குச் சரியான சாலிவாகன சகாப்தம் 1751 (கி. பி. 1829) விரோதி வருஷம் மார்கழி மாதம் 26-ம் தேதி குருவாரம் மிருகசீர்ஷ நட்சத்திரம் கூடிய சுபதினம்.

ஸ்ரீ தேசிகர் சிலகாலம் ஆசிரமத்திற்குச் சமீபத்தி லுள்ள ஒரு வில்வ மரத்தடிக்குச் சென்று அண்ணு

மலையாரை நோக்கி நின்று திரும்பி வந்திருந்த குறிப்பை உணர்ந்தவர்கள், அவ்விடமே தகுதியானதென்று திருமேனியைச் சமாதி வைத்தனர்.

இப்பெரியாருடன் வாழ்ந்தவர்களில் ஸ்ரீ கோவிலூர் முத்திராமலிங்க ஞான தேசிகர் இவருக்குப் பின்பும், ஸ்ரீ உகந்தலிங்க ஞான தேசிகர் இவருக்கு முன்பும் பரிபூரணமாயினர்.

## VII. அண்ணுமலையின் மணிவிளக்கு

பொறிகளுக்கும் எட்டாத போதம் பெற்ற பெருமக்களின் திவ்ய சரித்திரமும் திருவிளையாடல்களும் பக்தருள்ளங்களுக்கு ஆறுதலும் ஆனந்தமும் அளிக்கின்றன. இவர்களுடைய கருணை, நோய்களையும் துன்பங்களையும் அந்நாளில் போக்கியதுபோல் இன்றும் மனக்கவலைக்கு மருந்தாகிச் சாதகர்களின் நம்பிக்கையைத் தூண்டிய வண்ணமாயிருக்கிறது.

'நின் அருளைச் சாலவும் நான் நம்புகின்றேன் சாமி அருணுசலமே!' என்று ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர் பாடியுள்ளார். மெய்ஞ்ஞான வள்ளலாகிய தேசிகரின் அருளை அன்பர்கள் இன்றும் நம்பி நலம் பெறலாம்.

மெய்யுணர்வைச் சத்தியமாய்த் தந்தது அருணுசலம் என்று ஸ்ரீ தேசிகரே கூறுவதால், சிதம்பர மௌனகுருவின் உபதேசம் ஆனந்த பரம குருவாகிய அண்ணுமலையாரின் கருணையொளிக்கே வழிகாட்டியதென்று சொல்லவேண்டும்.

உலகமாகிய விராட் புருஷ வடிவத்திலே சிதம்பரம் **இருதயம்** என்றும், திருவாரூர் **மூலாதாரம்** என்றும் கூறி அண்ணுமலையை **மணிபூரகம்** என்பர். ஸ்ரீ ஈசான்ய ஞான தேசிகர் அண்ணுமலையாரைச் 'சீ ல மு று யோகியர்கள் சிந்தை மணிவிளக்கே' எனக் குறிப்பிடுகிருர்.

சூரியன், சந்திரன், நெருப்பு என்னும் ஒளிகளுக்கெல் லாம் அந்த அந்த ஒளியாகத் திகழும் அண்ணுமலை மணி விளக்கே தொண்டர் மனக்கோயிலில் தூண்டா மணி விளக்காகும். 'திருவாதவூர்ச் செல்வர்க்கும் (மாணிக்க வாசகருக்கும்) மூவர்க்கும் (தேவாரம் பாடிய மூவர்க்கும்) மெய்ப்பொருளைச் செப்பிய' அண்ணுமலையாரே தமக்கும் மணி விளக்காகி அதிசயமாய் வழிகாட்டிஞரென்பது ஸ்ரீ ஈசான்ய ஞானதேசிகரின் தேர்ந்த கொள்கை.

இத்தகைய மெய்யுணர்வு பெற்ற ஸ்ரீ தேசிகர் அண்ணு மலையாரைப் பூஜித்த வகைதான் என்ன? ஐம்புலன் அடக்கி அருளான மலர் கொண்டு ஒரு காலம் இரு காலம் முக்காலம் அல்ல, எக்காலமும் பூஜை செய்ய ஆசைப் பட்டார். அத்தகைய அதிசய பூஜையால் அண்ணுமலை மணிவிளக்கோடு ஒன்றிநிற்தும் தனிப்பெரும்பேறு பெற்ருர்.

இத்தகைய சிவானந்த நிலையை அப்பர் சுவாமிகள்

**தெள்ளத் தேறித்**
**தெளிந்து தித்திக்கும் ஓர்**
**உள்ளத் தேறல்**
**அமுத ஒளிவெளி**

என்று படியுள்ளர்.

தாம் பெற்ற பாக்கியத்தை, அமுத ஒளியை ஸ்ரீ ஈசன்ய ஞான தேசிகர் தமது வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் வேண்டுவார் வேண்டியபடி வாரி வழங்கியுள்ளார்.

இவ்வரலாற்றுக் குறிப்புகள் இன்றும் சாதகர்களுக்கும் அன்பர்களுக்கும் வாழ்க்கைப் பெருநெறியில் மணிவிளக்காக உதவி வழிகாட்டும் என்பது திண்ணம்.




பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 10 | தரித்திருக்கிரேுரோ | தரித்திருக்கிருரோ |
| 16 | 7 | ஆச்சர்யமடனைந்தார் | ஆச்சர்யமடைந்தார் |
| 30 | 5 | அக்ரையிலே | அக்கரையிலே |
| ,, | 8 | விட்டர் | விட்டார் |
| 36 | 1 | படியுள்ளார் | பாடியுள்ளார் |
| ,, | 3 | ஸ்ரீ ஈசன்ய | ஸ்ரீ ஈசான்ய |

